## தலைமைக் கழக அறிவிப்பு

இதயதெய்வம்

# புரட்சித்தலைவர்

## பிறந்த நாள் விழா

மற்றும்

புரட்சித்தலைவர் தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவு பெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக ஆட்சிநடத்தி வருவதை ஒட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு இதுவரை ஆற்றிய அரும் பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டங்கள்

### 21-8-1987 வெள்ளிக்கிழமை

சென்னை
ஆர் கே நகர் தொகுதி
2 வது வட்டம்
சிறப்புரை
மாண்புமிகு அமைச்சர்
திரு கே கே எஸ் எஸ் ஆர் இராமச்சந்திரன் அவர்கள்
திரு இ மதுசூதனன் அவர்கள்
சென்னை மாவட்ட எம் ஜி ஆர் மன்றச் செயலாளர்
கலைநிகழ்ச்சி
திரு பல்லவன் சீனிவாசன் கலைக்குழுவினர்
கூட்ட ஏற்பாடு
திரு எஸ் சந்தானம் அவர்கள்
2-வது வட்ட கழகச்செயலாளர்

### 23-8-1987 ஞாயிற்றுக்கிழமை

ஆத்தூர் நகரம்
சேலம் மாவட்டம்
சிறப்புரை
திரு கேரள சுந்தரம் அவர்கள்
திரு கே பி ராமலிங்கம் எம் எல் ஏ அவர்கள்
திரு பி வேலு ராசாமணி பி ஏ பி எல் அவர்கள்
தலைவர் சேலம் மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர்கள் ஒன்றியம்
கூட்ட ஏற்பாடு
திரு இரா தென்னரசு அவர்கள்
செயலாளர் அறிஞர் அண்ணா நற்பணி மன்றம்
திரு ஆர் சண்முகம் எம் சி அவர்கள்
ஆத்தூர் நகர கழக துணைச் செயலாளர்
திரு ஆர் சவுந்திரராசன் எம் சி அவர்கள்
மாவட்ட பிரதிநிதி
ஆத்தூர்

### 24-8-1987 திங்கட்கிழமை

திட்டச்சேரி
திருமருகல் ஒன்றியம்
சிறப்புரை
மாண்புமிகு அமைச்சர்
திரு ஆர் சவுந்தரராசன் பி காம் அவர்கள்
திரு பாப்பா சுப்பிரமணியம் எம் எல் ஏ அவர்கள்
குத்தாலம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர்
கூட்ட ஏற்பாடு
திரு எஸ் ஆசைமணி பி எஸ்ஸி அவர்கள்
திருமருகல் ஒன்றிய கழகச் செயலாளர்
திரு எப் ஏ ஹாஜா முய்னுத்தீன் அவர்கள்
திட்டச்சேரி பேரூராட்சி செயலாளர்

### 25-8-1987 செவ்வாய்க்கிழமை

கல்லுமடை
கரம்பக்குடி ஒன்றியம்
புதுக்கோட்டை மாவட்டம்
சிறப்புரை
திருமதி மதுரை ஜி அன்னம்மாள் அவர்கள்
திரு எஸ் ரகுபதி பி.எஸ்ஸி ,பி எல் அவர்கள்
புதுக்கோட்டை மாவட்ட கழகச் செயலாளர்
திரு ஏ வெங்கடாசலம் எம் எல் ஏ அவர்கள்
திரு என குணசேகரன் அவர்கள்
புதுக்கோட்டை மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்
திரு எஸ் எம் சிதம்பரம் அவர்கள்
கரம்பக்குடி ஒன்றிய கழகச் செயலாளர்
திரு உ சுலைமான் அவர்கள்
கரம்பக்குடி ஒன்றிய எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்
திரு வி வரதராஜன் அவர்கள்
கூட்ட ஏற்பாடு
திரு ஏ சிவசாமி அவர்கள்
கல்லுமடை கிளைக்கழக செயலாளர்

### 25-8-1987 செவ்வாய்க்கிழமை

தலைஞாயிறு
வேதாரண்யம் தொகுதி
கிழக்கு தஞ்சை மாவட்டம்
சிறப்புரை
மாண்புமிகு அமைச்சர்
திரு ஆர் சவுந்தரராசன் பி காம் அவர்கள்
திரு அ பெ பால்ராஜ் அவர்கள்
கிழக்கு தஞ்சை மாவட்ட கழகச்செயலாளர்
திரு நாகை மா மகாலிங்கம் எம் பி அவர்கள்
திரு பாப்பா சுப்பிரமணியம் எம் எல்.ஏ. அவர்கள்
திரு எம் எஸ் மாணிக்கம் எம் ஏ அவர்கள்
திரு சிவ கனகசுந்தரம் அவர்கள்
வேதாரண்யம் ஊராட்சி ஒன்றியத் தலைவர்
கூட்ட ஏற்பாடு
திரு கே எஸ் அழகப்பன் அவர்கள்
தலைஞாயிறு ஒன்றிய கழகச்செயலாளர்

ஜெயலலிதா எம் பி
கொள்கை பரப்பு செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திமுக

சென்னை-14
17 8 1987

# அமைச்சர் பண்ருட்டியார் பதிலடி

[ முதல் பக்கத் தொடர்ச்சி ]

ஆனால் கருணாநிதி மானம் போய் விட்டது என்றார் மாலையில் விமானமே போய் விட்டது.

இந்திய இலங்கை ஒப்பந்தம் ஏற்பட்டு 4 நாள் வரை கருணாநிதி எதுவுமே பேசவில்லை ஆனால் அன்பழகனை விட்டு அறிக்கை விடச் சொன்னார்

சென்னை கடற்கரையில் கூடியிருந்த மக்கள் மத்தியில் பிரதமர் ராஜீவ்காந்தி ஒருவர் இல்லாமல் இருந்திருந்தால் ஒப்பந்தமே ஏற்பட்டிருக்காது அது யார் என்றால் இதோ இருக்கிற புரட்சித்தலைவர் தான் என்றார்

அந்த அளவுக்கு இலங்கை அரசை மண்டியிடச் செய்தவர் புரட்சித் தலைவர்.

### முதல்வர் உதவி

கடந்த 4 ஆண்டுகளாக செல்வத்தை வாரி வாரி இறைத்தவர் புரட்சித் தலைவர்.

ஆனால் கருணாநிதி இங்கே இருக்கிற ஒரு சிலரை அழைத்துக்கொண்டு டெசோ அமைப்பை ஏற்படுத்தினாரே அது எங்கே?

இலங்கையில் விமானங்கள் குண்டுகள் போடுகின்றன. பள்ளிக்கு சென்ற குழந்தை பத்திரமாக திரும்புமா என்று தெரிய வில்லை வேலைக்குப் போன கணவனை மனைவி உயிரோடு பார்ப்பாளா என்று தெரியவில்லை என்ற நிலை இருந்தது

அந்த நேரத்திலும் இங்கே ஆட்சியாக இருந்த போதும் மாவட்டம் தோறும் நடத்திய கூட்டங்களை கருணாநிதி யாருக்காக செய்தார்?

சட்டமன்றத்தில் 4 கோடி ரூபாய் விடுதலை புலிகளுக்கு வழங்கப்படும் என்று புரட்சித்தலைவர் அறிவிக்கச் சொன்னார்.

இலங்கையை தன் நிலையிலிருந்து கீழே கொண்டு வரச்செய்த பெருமை புரட்சித் தலைவருக்கு உண்டு.

ஒப்பந்தம் செய்தபோது பாரதப்பிரதமருடன் நான் சென்றேன்

### ஊக்கம் கொடுத்தவர்

பாரதப்பிரதமர் புரட்சித் தலைவரை தான் அழைத்தார் ஆனால் நான் இங்கே இருக்கிறேன் குட்டி ராமச்சந்திரன் வருவார்' என்று கூறினார்.

பிரதமர் ராஜீவ்காந்தி ஜெயவர்த்தனேயிடம் என்னை அறிமுகப்படுத்தினார்

"நீதான் சூத்ரதாரி உங்களால் (புரட்சித் தலைவர் உட்பட) தான் எனக்கு பெரிய தொல்லை இனிமேலாவது தொல்லை கொடுக்காமல் இருந்தால் போதும்" என்றார்

அந்த அளவுக்கு கடந்த 4 ஆண்டுகளாக போராளிகளுக்கு ஊக்கம் கொடுத்து இலங்கை அரசை இறங்கி வரச்செய்தவர் புரட்சித்தலைவர்

சிலபேர் கேட்கிறார்கள் இலங்கையில் இருக்கிற தமிழர்களுக்கும் சிங்களவர்களுக்கும் தானே ஒப்பந்தம் இதில் இந்தியா தலையிடலாமா என்கிறார்கள்

இலங்கை நாடு சுதந்திரம் பெற்றதிலிருந்து மொழி வெறியை வளர்த்து வந்ததே தவிர மக்களின் அறிவை வளர்க்கவில்லை.

1956ம் ஆண்டு சிங்களம் மட்டுமே ஆட்சி மொழி என்பதை எதிர்த்து மிகப் பெரிய கிளர்ச்சி நடந்தது

1957ம் ஆண்டு ஜூலை மாதம் 26ந் தேதி தமிழர் தந்தை செல்வாவும் பண்டார நாயகாவும் இன்றுபோலவே ஒப்பந்தம் போட்டார்கள்

அந்த ஒப்பந்தத்தை எதிர்த்து பத்தர்கள் கிளர்ச்சி நடத்தினார்கள் ஒரு புத்தபிட்சு பண்டார நாயகாவை சுட்டுக்கொன்றான்

மீண்டும் 1964ல் இதே ஜெயவர்த்தனேவின் கட்சி ஆட்சியில் இருக்க போது டட்லி சேனநாயகாவும் செல்வாவும் ஒரு ஒப்பந்தம் போட்டார்கள் என்ன ஆயிற்று? ஆட்சி கவிழ்க்கப்பட்டது

அதனால் தான் தமிழர் மட்டும் போட்டால் நிற்காது என்பதால் இந்தியா கையெழுத்துபோட்டது.

### ஏமாற்ற முடியாது

இலங்கையில் 4 பகுதிகளில் தமிழர்கள் இருக்கிறார்கள் அவர்களை ஏமாற்றுவது இலங்கைக்கு வழக்கமாகி விட்டது அதனால் தான் இந்தியா ஒப்பந்தம்போட்டது இதை ஏமாற்ற முடியாது

இப்படி பல முறை ஏமாந்தவர்களுக்கு காரடியனாக இந்தியா ஒப்பந்தம் போட்டுள்ளது இன்றைக்கு ஒப்பந்தத்தை நிறைவேற்றும் பொறுப்பு இந்தியாவைச் சேர்ந்தது

இலங்கை தமிழ் மக்களுக்குகார்டியனாக இருந்து ஒப்பந்தம் போட்ட பெருமை ராஜீவ்காந்திக்கு உண்டு புரட்சித்தலைவருக்கு உண்டு

ஆகவே இந்தியாவின் சொல்படி இலங்கை நடக்க வேண்டும்

ஜெயவர்த்தனே சொல்கிறார் இந்தியா உணவு போட்டதற்கு பதிலாக குண்டு போட்டால் என்ன ஆவது? அமெரிக்கா, பாகிஸ்தான் நாடுகளிடம் உதவி கேட்டால் உதவ மாட்டோம் என்கிறார்கள் இந்தியாவோடு ஒத்துப்போ என்கிறார்கள் என்றார்

புரட்சித்தலைவர் மத்திய அரசை தன் பக்கம் ஈர்த்து ஒரு உடன்பாட்டை ஏற்படுத்தியதை பார்த்தால் உண்மையிலேயே வயிற்றில் பால் வார்த்தது போல இருக்கிறது

இந்த ஒப்பந்தத்திற்கு பிறகு தமிழ் மக்கள் செத்தார்களா? அப்படி செய்தி உண்டா?

விடிழந்த மக்கள் வீடுகளுக்கு திரும்பிக் கொண்டிருக்கிறார்கள் கடைகளை திறந்துவைத்துக் கொண்டிருக்கிறார்கள் இதனை வரவேற்க வேண்டாமா தமிழ் மக்கள் பால் அன்புள்ளவர்கள் அடர்லாந்து, பிலிப்பைன்ஸ் நிகாரகுவா போன்ற நாடுகளில் இளைஞர்கள் ஆயுதம் ஏந்தியதைப் பற்றி படித்திருக்கிறேன்

அதைவிட உயர்ந்த பண்பை இலங்கை தமிழ் இளைஞர்களிடம் பார்த்தேன் ஆயுதம் இல்லாத சிங்களவர்களை தாக்கியதில்லை.

பஞ்சாபைபோல பஸ்சில் வந்தவர்களை தாக்கியதில்லை

உண்மையில் அவர்கள் பயங்கரவாதிகளல்ல விடுதலை வீரர்கள்.

பேனாவை இரவல் கேட்டாலே மூடியை கையில் வைத்துக் கொண்டு கொடுக்கிறோம் ஆனால் 10 15 ஆண்டுகாலமாக தோளோடு தோள்தாக்கிய ஆயுதத்தை ஒப்படையுங்கள் என்றபோது இந்திய பிரதமரும் புரட்சித் தலைவரும் கந்த உறுதியால் ஆயுதங்களை லாரி லாரியாக கொண்டுவந்து ஒப்படைக்கிறார்கள். இந்த மரபை வேறெங்கும் பார்க்க முடியாது

புரட்சித்தலைவர் மீது அசையாத பற்றும்பாசமும் கொண்டுள்ள தம்பி பிரபாகரன் இந்த இயக்க மக்களுக்கு இந்தியா பாதுகாப்பு தருமானால் ஆயுதங்களை ஒப்படைப்போம் என்றார்.

அதே நேரத்தில் இழந்த பதவியை பெற எதையும்சொல்பவர்கள் இருக்கும் போது எனக்கு எந்த பதவியும் வேண்டாம் இயக்கம் வேண்டுமானால் ஆட்சிக்கு வரும் என்ற தியாகத்தை சொல்கிறவர்கள் மீது பழி சொன்னால்; கிராமத்திலே சொல்லுவார்கள் அபாண்டம் சொன்னால் நாக்கு புழுத்து தான் சாவார் என்று அதுபோல் தான் ஆகும்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்

### நோயாளி தற்கொலை

சென்னை ஆக. 17 திருக்கண்ணையை சேர்ந்த ராமசாமி என்பவர் சென்னை பொது மருத்துவமனை மாடியிலிருந்து குதித்து தற்கொலை செய்து கொண்டார்

ஏற்கனவே அறுவை சிகிச்சை செய்துகொண்ட இவருக்கு மீண்டும் அறுவை சிகிச்சை நடக்க இருந்தது.

# புதிய மாவட்ட தலைநகரங்களில் தமிழ்நாடு ஓட்டல்

மதுரை ஆக. 17 புதிதாக துவங்கப்பட்டுள்ள மாவட்ட தலைநகர்களில் தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சி கழகத்தின் சார்பில் தங்கும் விடுதிகள் கட்டப்படும் என சுற்றுலா வாரிய தலைவர் டெ. பாலகுரு கூறினார் அவர் கூறியதாவது:-

தமிழகம் முழுவதும் எங்களது சுற்றுலா வளர்ச்சி கழகத்தின் சார்பில் ஏறத்தாழ 32 தங்கும் விடுதிகள் உள்ளன மேலும் புதிதாக ஏற்படுத்தப்பட்டுள்ள மாவட்ட தலைநகரங்களான திண்டுக்கல் இராமநாதபுரம். சிவகங்கை விருதுநகர் மற்றும் பழனி தூத்துக்குடி போன்ற இடங்களில் சுற்றுலா வாரியத்தின் சார்பில் தங்கும் விடுதிகள் கட்டப்படும் இதற்கென மாவட்ட ஆட்சித்தலைவருடன் பேச்சு நடத்துவதற்காகவும் இடங்களை தேர்வு செய்வதற்காகவும் இயக்குனர் ஒருவர் தனியாக நியமனம் செய்யப்பட்டுள்ளார்

குற்றாலத்தில் ரூபாய் 20 லட்சம் செலவில் தங்கும் விடுதி ஒன்று புதிதாக ஏற்படுத்தப்படும் இதற்கான பணிகள் விரைவில் தொடங்கப்படும் 5 அறைகள் அங்கே கட்டப்படும்.

வண்டியூர் கண்மாயில் 3 குழாய் கிணறுகள் போடப்பட்டுள்ளது வண்டியூர் சுற்றுலா திட்டம் ரூபாய் மூன்றேகால் கோடியில் உருவாக்கப்பட்டுள்ளது முதற்கட்டமாக கேண்டீன் விரைவில் அமைக்கப்பட உள்ளது. முழுமையாக பணி முடிய 3 ஆண்டுகள் முடியும் முதற்கட்ட பணிகள் ஒரு ஆண்டுக்குள் முடியும்

மதுரையிலிருந்து திருப்பதிக்கும் கன்னியாகுமரிக்கும் சுற்றுலாவளர்ச்சி கழகத்தின் சார்பில் சுற்றுலா பேருந்து விரைவில் விடப்படும் மதுரை நகருக்கென சுற்றுலா வாரியத்தின் சார்பில் 5 பேருந்துகள் ஒதுக்கப்பட்டுள்ளன குறிப்பாக சுற்றுலா செல்பவர்கள் இந்த பேருந்துகளை பயன் படுத்திக் கொள்ளலாம் இவ்வாறு சுற்றுலா வாரிய தலைவர் பாலகுரு தெரிவித்தார்.

# அரசவை கவிஞராக முத்துலிங்கம் நியமனம்

சென்னை ஆக 17- கவிஞர் முத்துலிங்கம் தமிழ்நாடு அரசு அரசவைக் கவிஞராக நியமனம் செய்யப்பட்டுள்ளார்.

முதல்வர் புரட்சித் தலைவர் இதற்கான உத்தரவை பிறப்பித்துள்ளார்

கவிஞர் முத்துலிங்கம் 3 ஆண்டு காலம் இந்தப் பதவியை வகிப்பார். முன்னாள் மேலவை உறுப்பினராகவும் பிரபலதிரைப்பட கவிஞராகவும் விளங்கும் முத்துலிங்கம் 300 படங்களுக்கு மேல் 600-க்கும் மேற்பட்ட பாடல்களை எழுதியுள்ளார்.

# நூல் விலை உயர்வை தடுக்க அரசு நடவடிக்கை திருநாவுக்கரசு தகவல்

மதுரை ஆக. 17- நூல்விலை உயர்வை தடுக்க அரசு நடவடிக்கை எடுக்கும் என வீட்டு வசதி துறை அமைச்சர் திருநாவுக்கரசு மதுரையில் நிருபர்களிடம் கூறினார்.

அவர் கூறியதாவது:-

மழை இல்லாதகாரணத்தினால் உற்பத்தி பாதிப்பு ஏற்பட்டுள்ளது நூல்விலை உயர்வை குறைக்க அரசு நிச்சயம் நடவடிக்கை எடுக்கும் இது சம்பந்தமாக சென்னைக்கு வந்த மத்திய அமைச்சர் ராம் நிவாஸ் மிர்தாவிடம் பேசினேன்.

அதுபோல் தென் மாவட்ட ஆலை அதிபர்களையும் அழைத்து ஆலோசனை நடத்தி உள்ளேன் தொழிலாளர்களின் நலனும் பாதிக்கப்படக்கூடாது ஆலையும் நலிவடைந்து விடக்கூடாது இது தொடர்பாக நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது

நெசவாளர்கள் போராட்டம் நடத்தி வருகின்றனர் போராட்டத்தை தவிர்த்து பிரச்சினையை தீர்க்க சுமுகமான முடிவுகாண அதிகாரிகளுடன் பேச்சு தொடர வேண்டும்

தமிழ்நாட்டில் ஏறத்தாழ ரூபாய் 175 கோடி கைத்தறி ரெடிமேட் துணிகள் வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளது இது சென்ற ஆண்டைவிட ரூபாய் 30 கோடி அதிகம்

### வளர்ச்சிப் பணிகள்

தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்தின் மூலம் ரூபாய் 150 கோடிக்கான வளர்ச்சி பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன இதன்படி ஆண்டிபட்டி ஜக்கம்பட்டி ஆகிய ஊர்களில் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படும்

புரட்சித்தலைவரின் திட்டமான 3 ஆண்டுகளில் 30 லட்சம் வீடுகள் கட்டும் திட்டம் வெற்றிகரமாக நிறைவேறி வருகிறது.

தமிழக வீட்டு வசதி வாரியம் தான வீடுகளை கட்டுவதற்காக அதிக அளவு கடன் வாங்கி உள்ளது ரூபாய் 47 கோடி ரூபாய் பெற்று உள்ளது

தேசியவீட்டு வசதி வங்கி மூலமாக மத்திய அரசு சார்பாக ரூபாய் 100 கோடி மாநிலங்களுக்கு கொடுக்க மத்திய நிதிநிலை அறிக்கையில் கூறப்பட்டுள்ளது அந்த பணமும் தமிழ் நாட்டுக்கு வந்தால் இன்னும் அதிகமான வீடுகளை தமிழ் மக்களுக்கு கட்டிக் கொடுக்க முடியும் என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

பேட்டியின்போது முத்தையா எம் எல் ஏ சோ நவநீதகிருஷ்ணன் எஸ் டி கே ஜக்கையன் ஆகியோர் உடன் இருந்தனர்

# மத்திய அமைச்சரவை விரைவில் மாற்றம்

புதுடெல்லி ஆக 17- மத்திய அமைச்சரவை மற்றும் இந்திரா காங்கிரஸ் கட்சி பெரும் அளவில் திருத்தி அமைக்கப்படவிருக்கிறது

மத்திய அமைச்சரவையில் இருந்து விலக்கப்பட்ட சில அமைச்சர்கள் இந்திரா காங்கிரஸ் கட்சியில் முக்கிய இடங்களில் அமர்த்தப்பட்டனர் அண்மையில் சில அமைச்சர்களும் தங்கள் பதவிகளில் இருந்து நீக்கப்பட்டனர்

நேருகாலத்தின்போதும் காமராஜர் திட்டப்படி சில மூத்த அமைச்சர்கள் மத்திய அமைச்சரவையில் இருந்து விலக்கப்பட்டு கட்சியின் முன்னேற்றத் திட்டத்தில் அமர்த்தப்பட்டனர் ஆனால் அந்ததிட்டம் எதிர்பார்த்த அளவில் நன்மை அளித்ததா என்பது திட்டமாகக் கூறமுடியாது.

தற்போது இந்திரா காங்கிரஸ்கட்சியைதிருத்தி அமைக்க அதன் தலைவர் பிரதமர் ராஜீவ் காந்தி திட்டமிட்டுள்ளார்.

மத்திய அமைச்சரவையும் திருத்தி அமைக்கப்படவிருக்கிறது.

இந்த இரண்டு வேலைகளும் ஒரே காலத்தில் நடைபெறும் என்று தெரிகிறது.

இந்த மாற்றங்கள் பெரும் பாலும் அடுத்த மாதம் செப்டம்பரில் நடக்கும் என்று நம்பகமாகத்தெரிகிறது, அப்போது மத்திய அமைச்சரவையில் பெருத்த மாற்றங்கள் ஏற்படும்.

இந்த நிலையில் துணை ஜனாதிபதி தேர்தல் நடக்கவிருக்கிறது.

மத்திய அமைச்சர்களாக இருக்கும் மோசினாகித்வாய் அல்லது பூட்டாசிங் ஆகியோர்களின் பெயர்கள் அடிபடுகின்றன இந்திரா காங்கிரஸ் சார்பில் இவர்களில் ஒருவர் நிறுத்தப்படலாம் என்று தெரிகிறது துணைஜனாதிபதிக்கு போட்டியிட வங்காளர் நூருல் ஹசன்மற்றும் மராட்டியக்காரர் டாக்டர் எஸ் டி சர்மா ஆகியோரின் பெயர்களும் பேசப்படுகிறது எஸ் டி சர்மா தற்போது ரஷ்யாவில் சுற்றுப்பயணம் செய்து வருகிறார்

# ரூ. 50 ஆயிரம் மதிப்புள்ள சாராயம் பறிமுதல்

சென்னை. ஆக 17- செங்கல்பட்டு கிழக்கு பகுதி மதுவிலக்கு போலீஸ் சூப்பரண்டெண்ட் சுந்தரவரதன் மேற்பார்வையில் போலீசார் விருகம்பாக்கம் மற்றும் அதைச்சுற்றியுள்ள 8 இடங்களில் சாராய வேட்டை நடத்தினர்

இதில் 5500 லிட்டர் சாராய ஊறலும் 300 லிட்டர் சாராயமும் கைப்பற்றப்பட்டது 40 பேர் இது தொடர்பாக கைது செய்யப்பட்டனர் கைப்பற்றப்பட்ட சாராயத்தின் மதிப்பு 50 ஆயிரம் ரூபாய் என்று போலீசார் தெரிவித்தனர்

# போலீஸ் அதிகாரி குடும்பத்திற்கு தேவாரம் உதவி

சென்னை ஆக 17 மதுவிலக்குத்துறை போலீஸ்இன்ஸ்பெக்டராக இருந்தவர். சுப்பையா [வயது 50] மதுவிலக்கு வேட்டைக்குச் சென்ற போது தவறுதலாக துப்பாக்கி வெடித்து இறந்தார் அவரது மனைவி பெயர் தனமணி இவர்களுக்கு 6 மகள்களும் ஒருமகனும் உள்ளனர்.

அவரது குடும்பத்திற்கு உதவ போலீஸ் கமிஷனர் தேவாரம் ஏற்பாடு செய்தார் போலீஸ் துறையினர் நிதி கொடுத்தனர் அதன் மூலம் ரூபாய் 10 ஆயிரம் வசூலித்து தனமணியிடம் கமிஷனர் தேவாரம் வழங்கினார்

# போராளிகள் ஆயுதங்களை ஒரே நாளில் ஒப்படைப்பு

## இந்திய உறுதிமொழியை ஏற்று எல்லா விடுதலை இயக்கங்களும் நடவடிக்கை

### [ அமைச்சர் பண்ருட்டியார் தகவல் ]

திருச்சி, ஆக 17- இந்திய-இலங்கை ஒப்பந்தத்தை ஏற்று தமிழீழ போராளிகள் அனைவரும் தங்களிடம் மீதம் வைத்துள்ள ஆயுதங்களை நாளை ஒரே நாளில் இந்திய அமைதிப் படையினரிடம் ஒப்படைத்து விடுவார்கள் என்று உணவு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

இந்தியா இலங்கை ஒப்பந்தப்படி முதலில் தமிழ் ஈழ விடுதலைப் புலிகள் தங்கள் ஆயுதங்களை இந்திய அமைதிப் படையிடம் ஒப்படைக்க தொடங்கினார்கள்.

ஆனால் போர் நிறுத்த ஒப்பந்தத்தை சிங்கள ராணுவத்தினர் மீறியதைத் தொடர்ந்து ஆயுதங்களை ஒப்படைப்பதை விடுதலைப் புலிகள் இயக்கம் தற்காலிகமாக நிறுத்தி வைத்தது.

எல்லா ஆயுதங்களையும் ஒப்படைத்து விட்டால் தமிழர்களுக்கு பாதுகாப்பு இராது.

ஆகவே தமிழர்களின் பாதுகாப்புக்கு இந்திய அரசு உறுதி தரவேண்டும் என்று விடுதலைப்புலிகள் இயக்கத்தலைவர் பிரபாகரன் அறிவித்தார்

இதைத்தொடர்ந்து பிரதமர் ராஜீவ் காந்தியின் அழைப்பின் பேரில் தமிழக உணவு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் டெல்லி சென்று பிரதமர் ராஜீவ் மற்றும் மத்திய அமைச்சர்களுடன் பேச்சு நடத்தினார்.

தமிழகம் திரும்பிய அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் திருச்சியில் நிருபர்களிடையே பேசுகையில் இது குறித்து கூறியதாவது:

இலங்கை தமிழர்களுக்கு முழு பாதுகாப்பு அளிக்க இந்திய அரசு உறுதி அளித்துள்ளது. இந்தியா இலங்கை ஒப்பந்தம் இலங்கை தமிழர்கள் அனைவருக்கும் பாதுகாப்பு அளிக்கும் வகையில் அமைந்துள்ளது

ஆயுதங்கள் ஒப்படைப்பது பற்றி அனைத்து தமிழ் போராளிகளுடனும் பேசி வருகிறோம்

ஆயுதங்கள் முழு அளவில் ஒப்படைக்கப்பட்டால் தான் ஒப்பந்தம் முழு அளவில் வெற்றிபெறும்

இந்திய அரசு உறுதி அளித்திருப்பதைத் தொடர்ந்து ஆயுதங்களை ஒப்படைக்க தமிழ் போராளிகள் முடிவு செய்துள்ளனர்.

ஆயுதங்கள் ஒப்படைப்பு நாளை செவ்வாய்க்கிழமை முழு அளவில் தொடங்கும்

நாளை 18-ம் தேதி பல்வேறு தமிழ் போராளிகள் இயக்கத்தினரும் தங்கள் ஆயுதங்களை முழு அளவில் ஒப்படைப்பார்கள் ஒரே நாளில் தமிழ் போராளிகள் தங்கள் ஆயுதங்கள் அனைத்தையும் ஒப்படைக்க முடிவு செய்யப்பட்டுள்ளது.

#### தமிழக உணவு நிலைமை

இந்திய - இலங்கை ஒப்பந்தம் சிறப்பான முறையில் அமைந்துள்ளது.

பருவ மழை தவறியதால் குறுவை சாகுபடி உள்பட வேளாண்மை பெரும் அளவில் பாதிக்கப்பட்டுவிட்டது இருந்தாலும் தமிழகத்தில் அரிசி தட்டுப்பாடு ஏற்படாது

இந்த ஆண்டு இறுதி வரை டிசம்பர் வரை தமிழகத்தில் போதிய அளவில் அரிசி கையிருப்பில் உள்ளது ஆகவே அரிசி தட்டுப்பாடு ஏற்படாது

மத்திய தொகுப்பில் இருந்து மாதம் ஒன்றுக்கு 50 ஆயிரம் டன் அரிசி தமிழகத்துக்கு அனுப்ப மத்திய அரசு இசைந்துள்ளது

இதில் 10 அல்லது 15 ஆயிரம் டன் அரிசிதான் தமிழகம் பயன்படுத்துகிறது ஏனென்றால் மத்திய அரசு பச்சரிசிதான் அனுப்புகிறது தமிழக மக்கள் பெரும்பான்மையாக புழுங்கல் அரிசி பயன்படுத்துகிறார்கள்.

தமிழகத்தில் உணவுப் பொருள் பொது வினியோக முறை சிறப்பாக உள்ளது. நியாய விலை ரேஷன் கார்டுதாரர்களுக்கு மாதம் தோறும் 12 கிலோ அரிசி சப்ளை செய்வது தொடர்ந்து நீடிக்கும் இதில் தடங்கல் ஒன்றும் ஏற்படாது

சத்துணவுத் திட்டம் மற்றும் பொது வினியோகம் ஆகியவற்றிற்கு மாதந்தோறும் ஒரு லட்சத்து 10 ஆயிரம் டன் அரிசி சப்ளை செய்யப்பட்டு வருகிறது.

திமுக நகராட்சி பஞ்சாயத்து யூனியன் நிர்வாகத்தில் அரசு தலையிடுகிறது என்ற பேச்சுக்கே இடமில்லை அதிகாரம் பறிக்கப்படுவதாகக் கூறப்படுவது முற்றிலும் தவறு.

நகர சபைகள் சிறப்பாக செயல்பட வேண்டும் என்று தான் அரசு விரும்புகிறது. ஆனால் கருணாநிதியும் திமுகவினரும் நிர்வாகத்தில் அதிகம் தலையிடுகிறார்கள்.

இவ்வாறு பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்

### விடுதலைப் புலிகளின் முடிவு

விடுதலைப்புலிகள் அனைவரும் தங்கள் ஆயுதங்களை நாளை ஒப்படைத்து விடுவார்கள் என விடுதலைப்புலிகள் இயக்கம் அறிவித்துள்ளது

விடுதலைப்புலிகள் ஏற்கனவே யாழ்ப்பாணம் பகுதியில் தங்கள் ஆயுதங்களை ஒப்படைத்து விட்டனர்.

இடையில் ஏற்பட்ட சில சந்தேகங்களை இந்திய அரசிடம் விடுதலைப் புலிகளின் பிரதிநிதிகள் தெரிவித்தனர்

இதற்கு இந்திய அரசு அளித்த விளக்கங்களையும் உறுதி மொழிகளையும் ஏற்று விடுதலைப்புலிகள் இயக்கம் தங்களிடம் உள்ள ஆயுதங்களை நாளை (18ந் தேதி) ஒப்படைக்க உள்ளதாக அறிவித்துள்ளனர்.

---



### எல்லைகாந்தி பெஷாவர் சேர்ந்தார்

புதுடெல்லி ஆக 17- எல்லை காந்தி கான் அப்துல் கபார்கானை பிரதமர் ராஜீவ்காந்தி தனி விமானம் மூலம் அவரது சொந்த ஊரான பெஷாவருக்கு அனுப்பி வைத்தார் அங்கு அவரை வடமேற்கு எல்லை மாநில முதல்வர் அராப் உஹாங்கீர் வரவேற்றார்,

எல்லை காந்தி கான் அப்துல்கபார்கான் உடல்நலக் குறைவு காரணமாக பம்பாய் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்தார் அங்கு குணமடைந்த பிறகு டெல்லியில் சில நாட்கள் தங்கியிருந்தார்

#### பக்கவாதம்

அப்போது அவருக்கு திடீரென்று பக்கவாத நோய் ஏற்பட்டது அதனால் சுயநினைவு இழந்த நிலையில் அவர் டெல்லியில் அகில இந்திய மருத்துவ விஞ்ஞான கழக ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார் அங்கு அவருக்கு தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டது இருந்தாலும் அவர் கடந்த 44 நாட்களாக சுய நினைவு இழந்த நிலையிலேயே இருந்தார்

இதற்கிடையில் எல்லை காந்தியை அவரது சொந்த ஊரான பெஷாவருக்கு கொண்டு செல்லவேண்டும் என்று அவரது மகன் வாலிகான் கேட்டுக் கொண்டார்.

அதற்கு ராஜீவ்காந்தி இன்னும் சில நாட்கள் தங்கியிருந்து சிகிச்சை பெறும்படி கூறினார் தீவிர சிகிச்சை முலம் எல்லைகாந்தியின் உடலில் சில முன்னேற்றம் ஏற்பட்டது அவர் தினமும் 2 மணிநேரம் நாற்காலியில் உட்கார்ந்து டாக்டர் சொல்வதை கவனமாகக் கேட்டார்

#### பாரத ரத்னா

இந்த நிலையில் எல்லை காந்தியின் சேவையை பாராட்டி அவருக்கு பாரத ரத்னா விருதை பிரதமர் ராஜீவ் வழங்கினார்.

எல்லைகாந்தியின் உடல் நிலையில் முன்னேற்றம் அடைந்ததை தொடர்ந்து அவரை சொந்த ஊருக்கு அனுப்ப ஏற்பாடுகள் செய்யப்பட்டன. தனிவிமானம் மூலம் அவரை பிரதமர் ராஜீவ்காந்தி அனுப்பி வைத்தார் எல்லை காந்தியுடன் மத்திய அமைச்சர்கள் நாடாளுமன்ற உறுப்பினர்கள் டாக்டர்கள் ஆகியோர் உடன் சென்றனர்.

90 நிமிடப் பயணத்திற்கு பிறகு எல்லை காந்தி அவரது சொந்த ஊரான பெஷாவர் சென்று அடைந்தார் அங்கு விமான நிலையத்தில் வடமேற்கு எல்லை மாநில முதல்வர் அராப் உஹாங்கீர் மற்றும் எல்லை காந்தியின் அவாமி கட்சி தொண்டர்கள் அவரை வரவேற்றனர்.

# தொழிலாளர் நலச் சட்டங்களை சிறப்பாக அமல் நடத்தும் தமிழகம்

சென்னை, ஆக 17- தொழிலாளர் நலச் சட்டங்களை அமல்படுத்துவதில் தமிழகம் முன்னணியில் உள்ளதாக கழக துணைப் பொதுச் செயலாளர் எஸ் ராகவானந்தம் கூறினார்

சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெற்ற 40-வது ஆண்டு விடுதலை நாள் விழாவில் கலந்து கொண்டு கழக துணைப் பொதுச் செயலாளர் எஸ் இராகவானந்தம் பேசுகையில் கூறியதாவது:-

நாடு விடுதலை பெற்ற பின்னாலே தொழிலாளர்களின் நல்வாழ்வு எதிர்பார்த்த அளவிற்கு இல்லையென்றாலும் பாராட்டத்தக்க அளவிற்கு சிறப்பாகவே உள்ளது

#### ஜீவா இல்லம்

விடுதலைக்குப் பின்னால் புரட்சித்தலைவர் ஆட்சியிலே தொழிலாளர் நல்வாழ்வு எத்தகைய மேம்பாடு அடைந்துள்ளது என்பதற்கு சென்னையிலே உள்ள ஜீவா இல்லமே சாட்சி.

பேச்சுவார்த்தைக்கு வரும் தொழிலாளர்கள் மிகக் குறைந்த செலவிலே அங்கு தங்கியிருந்து தங்கள் பணியை முடித்து விட்டுச் செல்லலாம்

இந்தியாவிலே முதன் முதலாக தொழிலாளர்களுக்கென சங்கம் அமைத்த பெருமை சென்னையைச் சாரும்

சென்னை பி. அண்ட் சி. மில்லில் தற்பொழுது தொழிற்சங்கம் உள்ள அதே இடத்தில் தான் 1918-ஆம் ஆண்டு ஏப்ரல் 27-ம் தேதி முதல் தொழிற்சங்கம் தொடங்கப்பட்டது வெள்ளைக்காரர்களால் இந்தியத் தொழிலாளத் தோழர்கள் அடிக்கப்பட்டதால் அந்த சங்கம் உருவானது

அத்தோடு தொழிற்சங்கத்திற்கு அரசின் ஒப்புதல் பெற்ற பெருமையும் சென்னை தொழிற்சங்கத்தையே சாரும். 1921-ல் "டிரேட் யூனியன் ஆக்ட்" கொண்டுவந்து தொழிற்சங்கத்திற்கு ஒப்புதல் பெற்றார்கள்.

#### சாட்சி

தொழிலாளத் தோழர்கள் பல்வேறு காலகட்டங்களில் பலவித போராட்டங்களை நடத்தி அடக்குமுறைகளுக்கு ஆளானார்கள்.

புரட்சித்தலைவர் ஆட்சியில் அரசியல் அணுகுமுறைகள் எத்தகையது என்பதை பெரியவர் கல்யாணசுந்தரம் போன்றவர்களே கூறினார்கள்

இந்த ஆட்சியில் ஒருநாள் தான் சிறையில் இருந்தேன் காலையில் பிடித்து மாலையில் விட்டுவிடுகிறார்கள் என்று அதுதான் புரட்சித் தலைவர் ஆட்சியின் சிறப்பு

புரட்சித்தலைவர் ஆட்சி ஏற்பட்ட பிறகு இந்த பத்து ஆண்டு காலத்தில் நடத்திய ஒருவேலைநிறுத்தத்தைகூட அரசு தடை செய்யவில்லை. தொழிலாளர்களின் உரிமையில் தலையிடவில்லை நம்மை நாமே ஆண்டு கொண்டிருப்பதால் தான் இத்தகைய நிலை

சோசலிச சிந்தனை உள்ளவர்கள் நம்மை ஆண்டுகொண்டிருப்பதால நாம் இந்த அளவிற்கு நல்வாழ்வு பெற முடிந்திருக்கிறது

விடுதலைக்குப் பின்னால் தொழிலாளர்களுக்கென ஏராளமான சட்டங்கள் போடப்பட்டுள்ளன அமைப்புகளே சங்கங்களே இல்லாத தொழிலாளர்களுக்குக்கூட பாதுகாப்புச் சட்டங்கள் போடப்பட்டுள்ளது.

அது மட்டுமல்லாது நிர்வாகத்தில் தொழிலாளிக்கு பங்கு தரவேண்டும் என்ற கொள்கையை எடுத்து தமிழ்நாடு அரசு மத்திய அரசை வலியுறுத்தி வருகிறது. அதற்கு மத்திய அரசும் ஒத்துக் கொண்டிருக்கிறது. சில நிறுவனங்களிலே இது நடைபெற்றும் வருகிறது விடுதலை இல்லையென்றால் இத்தகைய நிலையை சிந்திக்கக்கூட முடியாது.

மத்திய அரசும் மாநில அரசும் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு தொழிலாளர்களுக்கு உதவி வருகிறது இந்த நேரத்தில் தொழிற்சங்கங்களை நடத்துபவர்கள் இருக்கிற சட்டங்களை முறையாக செயல்பட நடவடிக்கை எடுக்க வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு இராகவானந்தம் கூறினார்.

#### நீர் மட்டம் மேட்டூர்

திருச்சி. ஆக. 17- மேட்டூர் அணையின் நீர் மட்டம் நேற்று 30.85 அடியாக இருந்தது.

அணைக்கு வினாடிக்கு 2878 கன அடி தண்ணீர் வந்து கொண்டு இருந்தது.

அணையில் இருந்து 1500 கன அடி வீதம் தண்ணீர் திறந்து விடப்படுகிறது.

---





### சென்னை -ஈரோடு குட்டி விமான சர்வீஸ்

ஈரோடு, ஆக. 17- ஈரோட்டில் இருந்து சென்னை மற்றும் பல வேறு முக்கிய நகரங்களுக்கு விரைவில் குட்டி விமான சர்வீஸ் நடத்தப்படவிருக்கிறது என்று அமைச்சர் முத்துசாமி கூறினார்.

தென்னக மாநிலங்களைச் சேர்ந்த மாவட்ட உயர்மட்டக் குழு மாநாடு நேற்று ஈரோட்டில் நடைபெற்றது.

தமிழக போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமி மாநாட்டை துவக்கி வைத்துப் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:

தமிழகத்தின் முக்கிய நகரங்களுக்கிடையே குட்டி விமான சர்வீஸ் (வாயு தூத் விமானம்) நடத்தப்படவிருக்கிறது

ஈரோடு சென்னை நகரங்களுக்கிடையே விரைவில் விமான சர்வீஸ் ஏற்படும் அதற்கான நடவடிக்கைகள் துரிதமாக எடுக்கப்பட்டு வருகின்றன.

விமான நிலயத்துக்கான நிலம் விரைவில் ஆர்ஜிதம் செய்யப்படும் ஓடுபாதை மற்றும் விமான நிலய கட்டிடங்கள் ரூபாய் 40 லட்சம் செலவில் அமைக்கப்படும்.

காலதாமதம் ஏற்படாமல் விமான சர்வீஸ் விரைவில் ஏற்பட தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

### சிட்லபாக்கம்-தாம்பரத்தில் கழக கூட்டங்கள்

தாம்பரம். ஆக 17- தாம்பரம் தொகுதி பரங்கிமலை ஒன்றியம் சிட்லபாக்கத்தில் ஸ்ரீ ராமுலு தலைமையில் கழகப் பொதுக்கூட்டம் நடைபெற்றது

மதுரை இளவரசன் எல்ல ராசமாணிக்கம் எம் எல் ஏ பரங்கிமலை ஊராட்சி ஒன்றிய துணை தலைவர் என் சி கிருஷ்ணன் சக்கரபாணி, பெரியவர் முத்துச்சாமி. ராஜகோபால மற்றும் பலர் பேசினர்

தாம்பரம் பாரதிநகரில் நாகப்பன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் மதுரை இளவரசன் சிறப்புரையாற்றினார். இக்கூட்டத்தில் எல்லை ராசமாணிக்கம் எம் எல் ஏ என் சி கிருஷ்ணன் நகர செயலாளர் செல்லமுத்து தாம்பரம் வ- சுமமுத்து மற்றும்பலர் பேசினா

# மாணவ-மாணவிகட்கு ரூ. 12000 செலவில் இலவச பாட புத்தகம்

சென்னை ஆக 17 முதல்வர் புரட்சித் தலைவர் பிறந்தநாளை யொட்டி 4 ஆயிரம மாணவ-மாணவிகளுக்கு ரூ 12 ஆயிரம் செலவில் நோட்டு புத்தகங்களை சைதை துரைசாமி எம் எல் ஏ வழங்கினார்

சைதைதாடண்டர் நகர் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி உயர் நிலைப்பள்ளி மாணவ மாணவிகளுக்கு ரூ. 12 ஆயிரம் செலவில் இலவசமாக நோட்டுப் புத்தகங்களை சட்டமன்ற உறுப்பினர் சைதை துரைசாமி வழங்கினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் பிறந்தநாளை யொட்டி 4 ஆயிரம் மாணவ மாணவிகளுக்கு நோட்டுப் புத்தகங்களை சைதை துரைசாமி வழங்கினார் விழாவில் ஆசிரியர் பயிற்சிக்கல்லூரி முதல்வர் பள்ளி தலைமை ஆசிரியர்கள் மற்றும் கழகத்தோழர்கள் பங்கேற்றனர்

---

